13th February 1959]

THE HON. SRI C. SUBRAMANIAM : அதுதான் இப்பொழுது சொன்னேன். ரூ. 49.19 கோடி ரூபாய் அளவிலே 11.89 கோடி ரூபாய் அளவுக்குத்தான் இப்பொழுது திட்டங்கள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. பாக்கித் திட்டங்கள் மூன்றாவது, நான்காவது திட்டத்தில் எடுத்துக்கொள்வதுபற்றி பரிசீலனை செய்யப்படும்.

SRI N. K. PALANISAMI : கலெக்டர் கொடுத்திருக்கும் திட்டத்தில் கோயமுத்தூரில் ஒரு மெடிகல் காலேஜ் திறக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். அது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கண்டிப்பாக ஆரம்பிக்க நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இன்னும் யோசனை அளவில்தான் இருக்கிறது. திட்ட அளவுக்கு வரவில்லை.

*Political sufferers*

* 283 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the lands in Wenlock Down, Ootacamund Nilgiris district, have been assigned to political sufferers; and

(*b*) if so, the extent of lands assigned?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) One hundred and twenty acres of lands were assigned to the 12 persons at the rate of ten acres each.

SRI N. K. PALANISAMI : இந்த நிலங்கள் விவசாயத்திற்காக கொடுக்கப்பட்டனவா ? அப்படியென்றால், அவை விவசாயம் செய்யப்படாமலிருப்பதற்கு என்ன காரணம் என்று அமைச்சர் அவர்கள் சொல்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விவசாயத்திற்குத்தான் கொடுக்கப்பட்டன. ஆனால், சில நிபந்தனை பேரில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. " ஸாயில் கன்ஸர்வேஷன் " நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும், காட்டிலாகாவினர் சொல்கிற மரம், செடிகள்தான் வைக்கவேண்டும் என்றெல்லாம் நிபந்தனைகள் இருக்கின்றன. அவ்வாறு சுற்றுப் பக்கத்தில் வைக்கப்படுகிற மரங்கள் கூட அரசாங்கத்திற்குச் சேர வேண்டும் என்ற நிபந்தனைக்கு உட்பட்டு இது கொடுக்கப்பட்டிருக்கிறது.

SRI S. RAMALINGA PADAYACHI : நிலம் இல்லாத தியாகிகளைத் " தியாகி " என்று கருதுவதோடு அல்லாமல், ஏழை என்றும் கருதி நிலம் இருக்கும் இடங்களில் அவர்களுக்கு நிலம் அடமானம் செய்ய அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நிலமில்லாத ஏழைகளுக்குக் கிடைக்க வேண்டிய நிலத்தை அடமானம் செய்ய வேண்டியது வேறு விஷயம். அது கவனிக்கப்பட்டுத்தான் வருகிறது.

SRI V. SUBBIAH : பண்படுத்தாத காடு கரம்பாக இருக்கும் நிலங்களைக் கொடுத்ததனால். அவர்கள் கையிலே இருக்கும் பணத்தைச் செலவழிக்கச் செய்திருக்கிறார்கள். அவர்கள் அரசாங்கத்திடமிருந்து கடனும் வாங்கியிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் எத்தனை பேர்கள் இருப்பார்கள் ? அவர்களுக்கு வேறு நல்ல நிலங்களை மாற்றிக் கொடுப்பதற்கு ஏதாவது வழி இருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கிடைக்கக்கூடிய நிலத்தைத்தான் கொடுக்க முடியும். அவர்களை நிர்ப்பந்திக்கவில்லை. அவர்கள் பார்த்து வேண்டுமென்று வாங்கிக்கொண்டார்கள்.

[13th February 1959

SRI K. VINAYAKAM : Are any conditions imposed before assigning these lands to the political sufferers that they should not make those lands over or sell them over within a prescribed time and if so, was any instance brought to the notice of the Government in which such lands have been disposed of in the district of Chingleput?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, a question like this was answered the other day in this House by my colleague, the Hon. Minister for Revenue. He said that according to the original conditions, they should not sell those lands, but subsequently they have been permitted to sell those lands.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : டி–பாரஸ்ட் செய்யப்பட்ட பாரஸ்டு நிலங்களை சில தியாகிகளுக்குக் கொடுத்திருக்கிறார்கள். ஏற்கனவே விவசாயம் செய்யப்படாத நிலங்கள் சில தியாகிகளுக்குப் பட்டா செய்து கொடுக்கப்படாமல் இருக்கின்றன. நிலமில்லாத ஏழைகளுக்குக் கொடுக்கப்படுகிற அதே கண்டிஷன் பேரில் இவர்களுக்கு அந்த நிலத்தை ஏன் அடமானம் செய்யக்கூடாது ? அதுவும் அவர்கள் பொஸெஷனில் இருக்கும் இடத்தை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது வேறு கேள்வி. இதைத் தனி கேள்வியாக கேட்டால், சம்பந்தப்பட்ட அமைச்சர் பதில் அளிப்பார்.

SRI A. GOVINDASAMY : ஏற்கனவே நிலம் இருக்கிற தியாகிகளுக்கு நிலம் வழங்கப்பட்டதா ? நிலமே இல்லாதவர்களுக்கு நிலம் வழங்கப்பட்டதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தக் கேள்வியைக் கூட கனம் ரெவினியூ அமைச்சருக்குப் போடவேண்டும்.

SRI M. KALYANASUNDARAM : இந்தக் கேள்வியில் குறிப்பிட்டிருக்கும் நிலம் எப்பொழுது பட்டா செய்யப்பட்டது ? இவ்வளவு காலமாக அது விவசாயத்திற்குக் கொண்டுவரப்படாமல் இருப்பதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 1949-வது ஆண்டிலே மனு கோரப்பட்டது. ஆனால், வென்லக் டவுனிலே இருக்கிற சில நிபந்தனைகளை அனுசரிக்க வேண்டும், காட்டிலாகா சொல்லும் நிபந்தனைகளையெல்லாம் கவனிக்க வேண்டும் என்று இருந்தது. அந்த நிபந்தனைகளையெல்லாம் அவர்கள் நிறைவேற்றுகிற வரையிலே அவர்களுக்கு அதை ஊர்ஜிதப்படுத்தவில்லை. அவ்வாறு 1954–55 வரையில் இருந்தது. அதற்குப் பிறகுதான் காட்டிலாகாவினர் சொல்கிற நிபந்தனைகளையெல்லாம் நிறைவேற்றிவிட்டார்கள் என்ற தகவல் கிடைத்தது. அதற்மேலேதான் அரசாங்கம் அவர்களுக்கு அந்த நிலத்தை ஆர்ஜிதப்படுத்தியிருக்கிறது. அதற்குமேல் என்ன செய்திருக்கிறார்கள் என்பதற்குத் தகவல் இல்லை.

SRI M. P. SUBRAMANIAM : சாதாரணமாக, நிலத்தை அடமானம் செய்கின்றபோது மூன்று ஆண்டு காலத்திற்குள்ளாக சாகுபடிக்குக் கொண்டு வரவில்லையென்றால் அதை ரத்து செய்ய வேண்டுமென்ற விதி இருக்கிறது என்பது அமைச்சருக்குத் தெரியுமா ? 1954-இல் ஊர்ஜிதம் செய்யப்பட்டும் அதில் 1959 வரையில் சாகுபடி செய்யப்படவில்லையென்றால், அதை ஏன் ரத்து செய்யவில்லை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் முன்பே சொன்னேன். சாகுபடிக்குக் கொண்டுவரவில்லை என்ற தகவல் என்னிடம் இல்லை. மரம், செடிகள் வைத்திருக்கலாம். ஆனால், ஒன்றுமே செய்ய

13th February 1959]

வில்லை. நிபந்தனைப்படி அதை மீண்டும் எடுத்துக்கொள்ளலாம் என்று ஏற்பட்டால், அரசாங்கம் எடுத்துக்கொள்வார்கள். மறுபடியும் யாருக்கும் கொடுக்கமாட்டார்கள்.

SRI T. S. RAMASWAMY PILLAI: Is it a fact that this Wenlock Downs is a beauty spot in Ooty and if so, may I know whether this assignment has in any way affected its beauty?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I have seen this Wenlock Downs. It is no doubt a beauty spot. But, I may inform the hon. Member that the assignment of this particular land does not in any way affect the beauty of this spot.

*Government advertisements*

* 284 *Q*.—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state— 9–10 a.m.

(*a*) whether the Centre have communicated to this State, the recommendation of the Lok Sabha Estimates Committee, that the State Government should consult the Legislators in preparing the list of newspapers carrying Government advertisements; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) No.

(*b*) Does not arise.

SRI N. K. PALANISAMI: பத்திரிகைகளுக்கு விளம்பரம் கொடுப்பதற்கு சர்க்காரால் ஏதாவது நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றனவா ? அப்படியானால் அப்படிப்பட்ட நிபந்தனைகள் என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: விளம்பரத்தின் மூலமாக பலன் ஏற்பட வேண்டும். அப்படி எந்தப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்தால் பலன் கிடைக்கிறது என்று கருதுகிறார்களோ அந்தப் பத்திரிகைகளில்தான் விளம்பரம் செய்வார்கள்.

*Drinking water*

* 285 *Q*.—SRI A. GOVINDASAMY: கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கடலூருக்குக் குழாய் மூலம் குடி தண்ணீர் வழங்க இன்னும் எவ்வளவு காலம் பிடிக்கும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU: The Cuddalore Water Supply Improvements Scheme is expected to be completed by September 1957.

(ஸ்ரீ எ. கோவிந்தசாமி கேள்வி கேட்க எழுந்தார்.)

MR. SPEAKER: பதில் சொல்லி முடிப்பதற்குள் எப்படி உபகேள்வி கேட்கமுடியும் என்பதுதான் தெரியவில்லை.

SRI A. GOVINDASAMY: கவர்னர் வந்து தண்ணீர் டாங்குகளை திறந்து விட்டார். அது செப்டம்பர் மாதத்தில் திறப்பது என்று சொல்லுகிறார், அதனால்தான்.